12th November 1965] [Dr. H. V. Hande]

this is not a question of Rs. 1½ crores. It is not a question of the amount being small. It is a question of disturbing the psychology of the farmer. The farmer is already groaning under innumerable troubles. By the imposition of this surcharge we may not arithmetically be causing much trouble to the farmer. But still what happens to the farmer's psychology? He is already downtrodden. What will he feel when the Government are against him? How bitterly he will feel? I request the Hon. Minister to consider this point.

One more point, Sir. We had a very fine cry—an excellent slogan given to the whole country by our beloved Prime Minister. The slogan is "Jai Kisan". This was started thirty years ago by Professor N. G. Ranga, the leader of the Opposition in the Lok Sabha. This is a wonderful slogan. I fully subscribe to this slogan. Let us implement this fine slogan that has been revived by our beloved Prime Minister. Let us rise to the occasion and let us not curb the enthusiasm of the kisans. Let us bear in mind the words of the Prime Minister and try to waive this Rs. 1½ crores of surcharge.

Finally, I would like the Hon. Minister to take note of what the Deputy Leader of the Opposition said. As he said, the most important thing now is defence effort. Any army marches on its belly. We must remember that unless we produce enough food in our country, we can never fight effectively. To keep the jawans in good humour, and to keep them in good state of mettle, the most important national effort is to see that we step up our production of food. That is our bounden and sacred duty. Whatever measures we may bring in must not affect the production of foodgrains and must not upset the target that we have set for ourselves. It is imperative that we should produce more. It is imperative .........

DEPUTY CHAIRMAN : The hon. Member will please finish soon. There are a number of Members who want to speak on this Bill.

DR. H. V. HANDE : Only two sentences more, Sir. All that I say is, "let us try to keep our targets." If we do not do it, and if we bring in this measure, I am afraid that it may even be considered an anti-national measure. With these words, Sir, I wind up.

DEPUTY CHAIRMAN : I now fix a time-limit of five minutes for each speaker. Sri M. Sankaralingam Pillai will now speak.

* **திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை :** கனம் உதவித் தலைவர் அவர்களே, நமது நாட்டின் இன்றைய நிலையில் நம் மானத்தைக் காப்பாற்றி வருபவர்கள் இருவர். போர்முனையில் எதிரிகளின் தாக்குதலுக்கு தன் உயிரை அர்ப்பணித்து நம் நாட்டின் மானத்தைக் காத்துவருபவர், போர்வீரர். உள்நாட்டில் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு உயிர் கொடுக்கும் விதத்தில் உணவு கொடுக்க ஏர்முனையில் கடும் வெயிலின் கொடுமையின் மத்தியில் நின்று நம் மானத்தைக் காத்துவருபவர், உழவர். யுத்த

[திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை] [12th November 1965

வீரர்களுக்கு அவர்களுடைய சம்பளத்தில் 25 சதவிகிதம் வரி போட்டால் அது எப்படி இருக்குமோ அப்படித் தான், விவசாயி களுக்கு 25 சதவிகிதம் அதிகமாக வரி போடுவதும் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். உண்மையில், நமது அரசினர் விவசாயிகளின் இன்றைய நிலையை சரியாக உணரவில்லை. ஏதோ சில புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு அவர்கள் நல்ல நிலையில் இருக்கிறார்கள் என்று நினைத்தே இந்த வரியை இந்த அரசினர் போடுகிறார்கள் என்று நினைக்கிறேன். இன்று சமூகத்தில் கடை நிலையில் புழுக்களாக இருக்கிறார்கள் விவசாயிகள் என்பதை நாம் உணர வேண்டும். நாம் அவர்கள் உற்பத்தி செய்யும் உணவை உண்டு மகிழ்ந்து இந்த மன்றத்திலும் மற்ற இடங்களிலும் இருக் கிறோம். நாம் மனம் புழுங்க வேண்டிய நிலையில் அவர்கள் இன்று இருக்கிறார்கள். அவர்களுக்கு வரி போடக்கூடிய நிலையில் அவர்கள் இன்று இல்லை. இன்றைய நிலையில் உணவு உற்பத்தி செய்கின்ற விவசாயியின் தொல்லை அளவிடற்கரியது. நெல்லை உற்பத்தி செய் தால் ஏக்கருக்கு 15 மூட்டை நெல்லைக்கூட விளைய வைக்க முடியவில்லை. அதையும் கண்ட்ரோல் ரேட்டுக்குக் கொடுத்து விட்டால், அதற்குப் பிறகு எங்குபோய் என்ன செய்வது என்றே தத்தளித்துக் கொண்டிருக்கிறார்கள் விவசாயிகள். அதற்குத் தண்ணீர் கிடைப்பதில்லை. மற்ற வியாபாரப் பொருள் விவசாயம் இருக்கிறது. அது நமது கண்ணுக்குத் தெரிவதில்லை. ஏனென்றால் அதிலே வரி போட்டால் எதிர்க் கிளர்ச்சி இருக்கும், அதிகமாக இருக்கும் செல்வந்தர்களைப் பாதிப்பதால். இது ஏழை விவசாயி களைப் பாதிப்பது. அவர்களுக்கு வரி போட்டால், அவர்கள் சார்பிலே சட்ட மன்றத்திலே குரல் எழும்புகிறதே தவிர, அவர்கள் மத்தியிலேயிருந்து குரல் எழும்புகிற அளவுக்கு உருவாக்கக்கூடிய பொருளாதார நிலைமை இல்லை. ரப்பர் பயிர் இருக்கிறது. மிளகுப் பயிர் இருக்கிறது. தென்னைப் பயிர் இருக்கிறது. புகையிலைப் பயிர் இருக்கிறது. கரும்புப் பயிர் இருக்கிறது. இதற்கு எல்லாம் வரி போடாமல் நெற்பயிர் செய்கிற விவசாயிகளுக்குத் தண்ணீர் வரியோடு அதிகவரி போடுவது நம்மை நாமே அழித்துக் கொள்கிற ஒரு வழியே தவிர ஒன்றும் இல்லை என்றுதான் கருதுகிறேன். எனவே இந்தச் சட்டம் இங்கே நிறைவேறினாலும்கூட அமுல் நடத்துவதிலே நமது அரசினர் மிக எச்சரிக்கையாக இருந்து நெல் விவசாயிகளுக்கு மானியம் வழங்கவேண்டும். ஏக்கருக்கு 12 ரூபாய் மானியம் வழங்கப்படுமானால் நெல் விவசாயம் இருக்கும். சில நாட்களுக்கு முன்னால் உள்துறை அமைச்சர்கூட ஒரு மாவட்டத்திலே நெல்லிலே இருந்து கரும்புக்கு மாறி இருக்கும் நிலம் எவ்வளவு என்று சொல்லத் தெரியவில்லை; அதைக் கணக்கு எடுக்கவும் முடியவில்லை என்று சொன்னார்கள். விவசாயத் துறை யிலே இருக்கிற புள்ளிவிவரம் எவ்வளவு தவறானது, எவ்வளவு தெளிவாக இல்லாமல் இருக்கிறது என்பதையெல்லாம் தெரிந்து கொள்வதற்கு இது ஒரு வழியாக அமைகின்றது. எனவே விவசாயி களைக் காப்பாற்றுவதன் மூலம் தான் நம்மை நாமே காப்பாற்றிக் கொள்ள முடியும். உணவு உற்பத்தியைப் பூர்த்தி செய்துகொள்ள முடியும். எனவே நெல் விவசாயம் செய்கின்றவர்களுக்கு எல்லா

5-00 p.m

12th November 1965] [திரு. எம். சங்கரலிங்கம் பிள்ளை]

உதவியும் அளித்து மானியம் வழங்கவேண்டும் என்ற நிலையில் இருக்கிறோம். மாறாக வரிபோட்டு உயர்த்துகிறோம். அது நம்மை எவ்வளவு பாதிக்கும் என்பதை அரசியலில் எல்லாத் தரப்பிலே இருந்தும் சொல்கின்றவர்களின் கருத்துக்கு மதிப்புக் கொடுத்து அமுல் நடத்துவதிலே விரிவாக அமுல் நடத்தாமல் தருணத்திற்கு ஏற்றபடி மாற்றி அமைக்கவேண்டும் என்று கேட்டு அமைகிறேன்.

* **திரு. கே. வி. ராமசாமி:** சட்ட மன்ற உப தலைவர் அவர்களே, இன்றைய தினம் விவசாயிகளுக்காக ஏற்பட்டிருக்கும் சர்சார்ஜ் விஷயத்தைப்பற்றி பல நண்பர்கள் இந்த மன்றத்திலே பேசியாகி விட்டது. ஆனால் எல்லோரும் விவசாயிகளுக்குப் போடக்கூடிய வரியானது தற்சமயத்தில் ஏற்றதல்ல என்ற கருத்துடனேயே பேசியுள்ளார்கள். ஆனால் நான் ஒன்று கூற ஆசைப்படுகிறேன். விவசாயி பட்டினியிருந்தாகிலும்கூட இந்த நேரத்தில் தன்னுடைய உயிரைக் கொடுப்பதற்கு சித்தமாக இருக்கிறான் என்ற கருத்து இருக்கிறது. ஆனால் அதே நேரத்தில் விவசாயியே தனக்கு விளையக்கூடிய நோத்திலே தனக்கு வரி அதிகமாக ஆகிவிட்டது என்ற கருத்து ஏற்படாதவண்ணம் நமது மதிப்பிற்குரிய சர்க்கார் விவசாயிகளுக்கு வேண்டிய நல்ல நிலைமைகளை உண்டுபண்ணவேண்டும். அவர்களுக்கு அந்தக் கருத்து மாறுபட்டு அவர்களுக்கு உணர்ச்சி வேகம் ஏற்படவேண்டும். அந்த நிலையை உண்டுபண்ணவேண்டியது நம்முடைய சர்க்காரின் கடமையாக இருக்கவேண்டும். அப்படி இருந்தால் விவசாயி இதையெல்லாம் பொருட்படுத்தமாட்டான். விவசாயிக்கு பல உபத்திரவங்கள் இருக்கின்றன. அந்த உபத்திரவங்கள் முதலிலே நீங்கவேண்டும். விவசாயிக்கு இருக்கக்கூடிய பல கஷ்டங்களை இந்த மன்றத்திலே நான் எடுத்துக் கூறி இருக்கிறேன். அவர்களுக்கு முதலிலே கவுரவம் வேண்டும். அதிகாரிகளிடத்தில் சென்றால் மரியாதை வேண்டும் என்பதைச் சொல்லியுள்ளேன். அதுபோல இன்றைக்கு சில இடங்களிலே எப்பொழுதோ லோன் கொடுத்திருக்கிறார்கள். அந்த லோனை பல நாட்கள் விட்டுவிட்டு திடீரென்று அதற்கு உடனே ஜப்திக்கு ஏற்பாடு செய்கின்றார்கள். உதாரணமாக நமது சட்டமன்றத்திலே இருக்கக்கூடிய நமது மதிப்புக்குரிய திரு. ஜானகிராம முதலியார் விஷயம் கூட இன்று இருந்து கொண்டிருக்கிறது. அவர்கள் ஏதோ லோன் வாங்கி அதற்கு சிறுகச் சிறுக பணம் கட்டியும் உள்ளார்கள். அப்படி இருந்தும் இவ்வளவு காலத்துக்குப் பிற்பாடு இப்பொழுது அது ஜப்திக்குகூட வந்திருக்கிறது என்று நேற்றைய தினம் என்னிடத்திலே சொன்னார். இந்த மாதிரி விவசாயிக்கு எந்த விதத்திலேயும் ஏன் ஜப்திக்கு வந்தது என்று தெரியாத முறையிலே கூட இருப்பதைப் பார்க்கிறபோது வருத்தம் ஏற்படுகிறது.

அதேபோல, என்னுடைய கிணறு 3 வருஷத்துக்கு மேலாகிறது. அதற்கு இப்பொழுது மினிமம் சார்ஜ் போட்டு பில் வந்திருக்கிறது. அதற்கு எப்பொழுதுமே மினிமம் சார்ஜ் கிடையாது. இந்த மாதிரியான நிலைமைகள் எல்லாம் வரும்போது விவசாயிக்குக் கஷ்டம் ஏற்படும். வரி 100-க்கு 25 என்று இருக்கிறது. ஒரு ஏக்கருக்கு 5 ரூபாய் இருக்கிறது என்றால் அவர்களுக்கு 25%, 1¼

ரூபாய் சேர்ந்து 6¼ ரூபாய் வருகிறது. இந்த 6¼ ரூபாய் ஒரு எறும்பு கொண்டு போகிற அளவு இல்லை. ஒரு விவசாயிக்கு நல்ல விளைச்சல் இருக்கிறபோது ஒரு கள்ளன் நாலு பக்கத்திலே இருந்து திருடிக்கொண்டுபோகிற அளவு இல்லை. இதையெல்லாம் பொருட்படுத்தமாட்டான். விவசாயி எப்பொழுதும் தேசத்துக்காக தன்னுடைய உயிரைக் கொடுப்பதற்குத் தயாராக இருந்து கொண்டு இருக்கிறான். அப்பேர்ப்பட்ட ஒருவனுக்கு நாம் செய்ய வேண்டிய உதவிகளைச் செய்யாமல் இருந்துகொண்டு இருக்கிறோமே என்பதை இந்த மன்றத்திலே பல தடவை பேசியிருக்கிறேன் என்பதை ஞாபகப்படுத்த ஆசைப்படுகிறேன். ஆகவே வரியைப்பற்றிக் கவலை இல்லை. விவசாயிகளின் உழைப்புக்கு ஏற்ற ஊக்கத்தைக் கொடுக்க வேண்டியது நமது சர்க்காரின் கடமை என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் பல தடவை பயிர் இன்ஷூரன்ஸ் வேண்டும், வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிறேன். அதைக் கொண்டுவரவே இல்லை. அதனால் பாதிக்கப்பட்ட விவசாயிகள் எவ்வளவோ பேர் இருக்கிறோம். எனவே அதையும் செய்யவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். நேரம் அதிகமாக நான் எடுத்துக்கொள்ள ஆசைப்படவில்லை. ஆகவே இந்த வரியைப்பற்றி நான் அதிகம் என்று கூற ஆசைப்படவில்லை. விவசாயிகளுக்கு கிணறுவெட்ட மானியம் இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கொடுக்கவேண்டும். தண்ணீர் இல்லாத இடத்துக்குக் கிணறுவெட்ட நிறைய பணம் கொடுத்து ஆதரவு கொடுத்தால் நல்ல முறையிலே இந்த வரியைப் பற்றி லட்சியமே செய்யமாட்டார்கள். ஆகவே இப்பேர்ப்பட்ட விஷயங்களிலே நல்ல ஆதரவு செய்வார்கள் என்று நம்பி நான் இதை ஆதரிக்கிறேன்.

* **திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்**: தலைவர் அவர்களே, இந்த வரி அதிகமாக இருக்கிறது. பெரும்பாலும் காங்கிரஸ் காரர்கள்கூட ஆட்சேபனைதான் பண்ணுகிறார்களே தவிர ஆதரிக்க வில்லை. வரி போடுவது சர்க்காருக்கு சகஜமாக இருக்கிறது. எருதுக்கு இருக்கிற நோய் காக்காய்க்குத் தெரியாது. அது போல விவசாயி விஷயம் இந்தக் காக்காய்க்குத் தெரியவில்லை. இப்பொழுது நடக்கிற விவசாயம் எப்படி இருக்கிறது என்றால் மழையே இல்லை. ஐப்பசி மாதம் தீர்ந்துவிட்டது. இன்னும் 15 நாட்கள் தான் இருக்கின்றன. இதற்குள்ளே மழை பெய்தால்தான் போயிற்று. கார்த்திகை மாதத்திலே மழை பெய்யாது. 40 வருஷமாகத் தெரியும். கார்த்திகை மாதத்திலே முதலிலே மழை பெய்யும். அதற்குப் பிறகு மழையே நின்று போகும். விவசாயத்திலே கொள்முதல் செலவு ஜாஸ்தி. கூலி ஜாஸ்தி. மனிதன் 2 ரூபாய் தின்றால் மாடு 4 ரூபாய் தின்கிறது. இங்கே சொல்லவில்லை. நான் கிராமத்திலே சொல்கிறேன். புண்ணாக்கு எல்லாம் இப்பொழுது விலை ஏறிவிட்டது. மாட்டை வைத்துத்தான் பயிர் செய்ய வேண்டும். மனிதனைக் காட்டிலும் மாட்டிற்குச் செலவு அதிகம் ஆகிறது. மாட்டை விற்றுவிடலாம் என்றால் வாங்கு

12th November 1965] *[திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்]*

வதற்கு ஆள் இல்லை என்கிறார்கள். ஏதோ பம்ப்செட் வைத்துக் கொண்டிருப்பவர்கள் பயிர் செய்கிறார்கள். காரிலே போகிற போது நன்றாக இருக்கிறது, விவசாயி கொழுத்துக்கொண்டு போகிறான் என்று சொல்கிறார்கள். நஷ்டம் இல்லை. லாபம்தான் என்கிறார்கள். இரண்டு யூனிட் 14 சத விகிதத்துக்கு வாங்கி 10 சத விகிதத்துக்குத்தான் கொடுக்கிறோம் என்று மந்திரி சொல்லி இருக்கிறார். யூனிட் 10-க்கு கொடுத்தால்கூட கட்டாது. ஐந்து ஹார்ஸ் பவருக்கு 30, 35 ரூபாய் கரண்டு சார்ஜு கட்டிக் கொண்டிருந்தோம். இப்போது 80, 90 ரூபாய் ஆகின்றது. எல்லாம் ஜாஸ்தியாகிவிட்டது. நெல்லை நாங்கள் இஷ்டம் போல் விற்பதற்கு விடுகிறார்களா? அதற்கு கண்ட்ரோல். அது தான் இருக்கிற விவசாயிக்கு ஆபத்து. மழை பெய்யவில்லை என்றால் மண்ணைச்சாப்பிட்டுப் பிழைக்கலாம். வைஷ்ணவ புராணத்தில் ஒரு பக்தர் மண்ணைத் தின்று பிழைத்தாராம். மழை பெய்யாவிட்டால் என்ன செய்வது? விவசாயிகளுக்குச் செலவு ஜாஸ்தி. உற்பத்தி ஆகிற சரக்கை இந்த விலைக்குத்தான் விற்கலாம் என்றும் தன் இஷ்டம் போல் விற்கக் கூடாது என்றும் ரெவின்யூ டிபார்ட்மெண்டு யாருக்குச் சொல்லுகிறதோ அவருக்குத்தான் விற்க வேண்டும். எனக்கு சுதந்திரம் கிடையாது. என் இஷ்டம் போல் விற்க விடுகிறார்களா? அதையும் பிடித்து இதையும் பிடித்தால் எப்படி ஓடும் மாடு? மாட்டைக் கட்டிப் போட்டு விட்டு ஏன் அடிக்கிறீர்கள்? முன்னுக்குப் பின் முரண். நிர்வாகச் செலவில் சிக்கனம் செய்யுங்கள். ஏன், பணம் இல்லை என்றால், ஒரு 10 கோடி ரூபாய் லோன் வாங்கிக் கொள்வது? விவசாயி கையில் பணம் இல்லை என்றால் கடன் வாங்கவில்லை? வரி போட முடியாத காலத்திலே கடன் வாங்கிக் கொள்ளவேண்டும். முடியுமானால் எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம். வேண்டாத பெண்டாட்டி கை பட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம் என்பது. இருக்கிற கஷ்டம் அதுதான். வேண்டாத பெண்டாட்டி விவசாயிகளுக்காகப் பாடுபடுகிறோம் என்று பேசுவதுதான். என்ன அவர்களைக் காப்பாற்றுகிறீர்கள்? ஒன்றும் கிடையாது. பருத்திக் கொட்டை என்ன விலை விற்கிறது? பெரியவர்கள் மந்திரிகள் பேசுகிறார்களே என்று கை தூக்குகிறோம். இந்த மாதிரி சர்க்காரை, 5-40
தொந்ரவு பண்ணுகிற சர்க்காரை வள்ளுவர் சொன்னார், வழி p.m.
மடக்கி அடிப்பதுபோல அதிகமாக கொடுமையாக வரி போட்டு ஜனங்கள் கஷ்டம் தெரியாமல் வசூல் பண்ணினால் அது வழி மடக்கி அடிக்கின்ற சர்க்கார் என்று சொன்னார், அந்தக் காலத்திலே, தயவு செய்து அந்த மாதிரி சர்க்கார் ஆகாமல் நல்ல சர்க்கார் ஆவதற்கு வழி பண்ணுங்கள், எவ்வளவு சொன்னாலும் அவ்வளவுதான். திருப்பித் திருப்பி இதைத்தானே பேசப் போகிறேன். நீங்கள் குறைக்கப் போவதில்லை. நானும் பேச எழுதி வைத்தேன். பேசினால் ஒன்றும் பிரயோஜனம் இல்லை. ஏதாவது காரியம் நடப்பது போல இருந்தால் பேசுவது சரிதான். பெரியவர் ஸ்ரீ. பால சுப்பிரமணிய அய்யர் சொன்னார். நல்லதைச் சொன்னார். நானும் வயதில் அந்தக் கணக்கில்தான் இருப்பேன். அவர் பேச்சைக் கேட்பது இல்லை. நீங்கள் யார் பேச்சைக் கேட்கிறீர்கள்?

*** திரு. எம். எத்திராஜுலு :** தலைவர் அவர்களே, இன்று நில வரி சர்சார்ஜு மசோதாவை ஆதரித்து நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்த நில வரி சர்சார்ஜு மசோதாவை கீழ்ச் சபையிலும் சரி, இங்கேயும் எல்லோரும் எதிர்க்கட்சிக்காரர்கள் எதிர்த்துப் பேசிக் கொண்டே தான் இருக்கிறார்கள். ஆகையால் அந்த மசோதாவிலே பாகிஸ்தான் ஆக்கிரமிப்பாலே ஏற்பட்டிருக்கும் விளைவுகளையொட்டி நமக்கு ஏற்பட்டிருக்கும் கஷ்டங்களை எல்லாம் நிவர்த்தி செய்வதற்கும் அதை சமாளிப்பதற்கும் இம்மாதிரியான ஒரு வரியைப் போடுவதற்கு நம் அரசாங்கம் முன் வந்திருக்கிறது. ஆனால் இந்த வரியானது விவசாயிகளுக்கு அதிகம், அவர்கள் குறைவுறுகிறார்கள் என்று சொல்லுவதெல்லாம் சரியல்ல. சென்ற வாரத்திலே கூட இந்த வரிகளைப் போட இருக்கிறார்கள் என்று நாங்கள் விவசாயிகளை சந்தித்தபோது விவசாயிகள் சிலர் சொன்னார்கள். இந்த வரி அதிகமானதல்ல. ஒரு விவசாயி 10 ரூபாய் வரி கட்டுகிறான் என்றால் அவன் கட்ட வேண்டிய வரி 2½ ரூபாய் தான் அதிகம். ஏழை விவசாயிகள் ஒரு ஏக்கர் இரண்டு ஏக்கர் 3 ஏக்கர் வைத்திருப்பவர்கள் இதில் ஒரு காலும் பாதிக்கமாட்டார்கள். 3 எக்கருக்கும் மொத்தம் 12 ரூபாய்க்கு மேல் அதிகம் இல்லை. 20 ரூபாய் வரி கட்டுபவர்கள் கூட ஐந்து ஏக்கருக்கு அவர்கள் ஏக்கர் ஒன்றுக்கு 4 ரூபாய்க்கு மேல் வரப் போவதில்லை. இதனால் விவசாயிகள் கஷ்டப்படவில்லை. கஷ்டப்படுகிறவர்கள் யார்? எப்போதும் இந்த மன்றத்திலும் சரி அல்லது அந்த மன்றத்திலும் சரி வரியை ஆதரித்தவர்கள், வரி போடுவதை ஆதரித்தவர்கள் இருக்கிறார்களா? வரி போடாமல் எப்படி பரிபாலனம் செய்வது என்று பார்க்கவேண்டும். விவசாயிகள் ஒத்துக் கொள்ளுகிறார்கள். இந்த நேரத்தில், இந்த சண்டை வந்திருக்கிற நேரத்தில் உடல், பொருள், ஆவி அத்தனையும் கொடுக்கத் தயாராக இருக்கிறோம் என்று சொல்லி என்.ஜி.ஓ.-க்கள், மற்றவர்கள் தயாராக இருக்கிறார்கள். இந்த மாநிலத்தில் 60 லட்சம் பட்டாதார்கள் இருக்கிறார்கள். மீதி இருப்பவர்கள் 2 கோடி 40 லட்சம் பேர்கள் இந்த வரியால் பாதிக்கப்படவில்லை. பார்க்கப்போனால் விவசாயிகள் மூலம் மொத்தம் 12 கோடி ரூபாய்தான் வரி வருகிறது. அதிலே 25 சதவிகிதம் என்று சொன்னால் 3 கோடி ரூபாய் வரவேண்டும். அப்படி வரவில்லை. 1½ கோடிதான் வருகிறது. நிலத்தைத் தரமாகப் பிரித்து அதிக விளைச்சல், குறைவான விளைச்சல் என்பதை பார்த்து வரி குறைக்கப்பட்டிருக்கிறது. மூன்று போகம் விளைகிற நிலங்கள் தஞ்சாவூரில் இருப்பதால் வரி அங்கே அதிகமாக இருக்கிறது. தென்னாற்காடு ஜில்லாவிலே ஒரு எக்கருக்கு 10 ரூபாய் வரி என்றால் 2½ ரூபாய் அதிகம் வரி வருகிறது. எல்லாம் கணக்கிட்டுப் பார்க்கும் போது 1½ கோடிக்கு மேல் வரவில்லை. இது அதிகமான வரி என்று சொல்லமுடியாது. இந்த வரி விவசாயிகளை ஒருக் காலும் பாதிக்காது என்று நான் சொல்லத் தயாராக இருக்கிறேன். விவசாயிகளை நாங்கள் சந்திக்கவில்லையா? தென்னாற்காடு ஜில்லாவிலே நான் குறிப்பாகச் சொல்லுகிறேன். வீர ஜவான்

12th November 1965] *[திரு. எம். எத்திராஜுலு]*

களுக்கு நிவாரணம் கொடுக்கவேண்டும் என்று கலை நிகழ்ச்சி நடத்த ஐந்நூறு ரூபாய், ஆயிரம் ரூபாய் டிக்கட்டு கொடுக்கிற நேரத்திலே சந்தோஷத்துடன் வாங்கிக்கொண்டார்கள். எவ்வளவு ரூபாய் வேண்டுமானாலும் எங்களிடம் இருக்கும்வரை யுத்த நிதிக்காக கொடுக்கத் தயாராக இருக்கிறோம் என்றார்கள். அதே போல இந்த வரியை விவசாயிகள் சந்தோஷத்துடன் கொடுக்கத் தயாராய் இருக்கிறார்கள். இந்த வரி நிரந்தரமாக இருக்காது. நிலைமை கொஞ்சம் சரியானதும் முதலமைச்சர் இந்த சர்சார்ஜை எடுத்துவிடுவார் என்று நினைக்கிறேன். சின்ன வரியை பிரமாதப் படுத்தி வரி போட்டு விட்டார்கள் என்று எதிர்கட்சி அங்கத் தினர்கள் பிரச்சாரம் செய்வது, எதிர்காலத்தை திட்டம் போட்டு எதிர்க்கிறார்கள். இதை விட்டால் வேறு சொல்ல இவர்களுக்கு வழி இல்லை. இந்த ஒன்றைத் தவிர குற்றச்சாட்டுக்கு வேறு என்ன இருக்கிறது? விவசாயிகளுக்கு சர்க்கார் என்னென்ன உதவி செய் கிறது என்று பார்த்தால் கிணறுகள் வெட்ட 3 கோடி ரூபாய் ஒதுக்கி யிருக்கிறது. ஒரு விவசாயிக்கு மின்சாரம் கிடைக்கவில்லை என்றால் உடனே கொடுக்கப்படுகிறது. விவசாயிகளுக்கு வேண்டிய வசதிகளை எல்லாம் சர்க்கார் செய்து கொடுக்கிறது. சர்க்கார் எல்லா உதவியும் செய்யும் நேரத்திலே $1\frac{1}{2}$ கோடி ரூபாய்க்கு வரி போட்டதை மிகைப்படுத்தி வேறு விதமாக அதைத் திருத்திக் கூறி களங்கம் ஏற்படுத்துவது எதிர்க்கட்சிகளுக்கு நல்லதல்ல என்பதை எச்சரிக்கிறேன். இந்த வரி அதிகம் இல்லை என்று விவசாயிகள் வரவேற்கிறார்கள். இன்னும் அதிகமாகக் கொடுப் பதற்கும் தயாராக இருக்கிறார்கள் என்பதை நான் தெரிந்து சொல்லுகிறேன். எப்போதாவது எதிர்கட்சி அங்கத்தினர்கள் எதையாவது இந்த மன்றத்தில் ஆதரித்து இருக்கிறார்களா? இந்த வரியை ஒப்புக்கொள்வதற்கு. சர்க்கார் போட்ட வரியை ஒப்புக் கொள்ளவில்லை என்று சொன்னோம். அதே நேரத்தில் சபையை விட்டு வெளியேறிவிட்டோம் என்று பொது மக்களிடம் சொல் வதற்காக இதை ஒரு காரணமாக வைத்து இங்கே பேசப்படுகிறதே தவிர வேறு ஒன்றுமில்லை. இந்த வரி பொருத்தமான வரி. இந்த வரியைக் கொண்டுதான் கிராமங்களுக்கு மேலும் நல்ல பல காரியங்களைச் செய்யவேண்டுமென்று அரசாங்கம் விதித்திருக் கிறது. இந்தச் சண்டை வந்தால் நாம் செய்யவேண்டிய பல காரியங்கள் தடைப்பட்டு இருக்கின்றன. ரோடுகள் போடவில்லை, பள்ளிக்கூடங்கள் கட்டுவதை நிறுத்தியிருக்கிறோம். இந்தப் பணத்தை நகரத்திற்குக் கொண்டு போய் செலவு செய்யப்போவ தில்லை. ஆனால் கிராமங்களுக்குச் செய்யவேண்டிய வேலைகளான ரோடு போடுதல், சாலை அமைத்தல், மின்சாரம், பள்ளிக்கூட குழந்தைகளுக்குச் சாப்பாடு, உரம் வாங்கி கொடுப்பது போன்ற முதலிய வேலைகளுக்குச் செலவு செய்யப்போகிறார்கள். இந்த வரியைக் கண்டு யாரும் ஆத்திரப்படவேண்டியதில்லை. கவலைப்பட வேண்டியதும் இல்லை. நிச்சயமாக இந்த வரியை விவசாயிகள் ஒப்புக் கொள்கிறார்கள் என்று சொல்லிக்கொண்டு இந்த மசோதா வை ஆதரிக்கிறேன்.

* **திரு. எம். ராஜகோபால் பிள்ளை :** கனம் உப தலைவர் அவர்களே, நான் பொதுவாக இந்தச் சபையில் பேசுவதே வழக்க மில்லை. காரணம், பேசுவதில் பயன் இல்லை என்பதற்காக அல்ல. திரு. அன்பழகன், திரு. பாலசுப்ரமணிய அய்யர், டாக்டர் ஹண்டே போன்றவர்கள் இந்த சபையில் இருக்கும் போது நடவடிக்கைகளைப் பார்த்து அதில் உள்ள குற்றங் குறைகளை ஆராய்ந்து அவற்றை அவர்கள் களைவார்கள், பல கருத்துக்களை எடுத்துச் சொல்லுவார்கள், அவற்றை எல்லாம் நான் தெரிந்துகொண்டு போகலாம் என்பதுதான் என்னுடைய நோக்கம். எப்போதும் மற்றவர்களைப் பார்த்துக் கற்றுக்கொள் வதுதான் நல்லது. மற்றவர்களுக்குக் கற்பிப்பது மிகவும் கடினம். இந்த வரியைப் பற்றி எல்லாம் எல்லோரும் அவர்களுடைய கருத்துக்களைச் சொன்னார்கள். நான் பொதுவாக என்னுடைய கருத்துக்களைச் சொல்கிறேன். வரி விதிக்காத அரசாங்கம் என்று ஒன்று இருந்தால் அது அரசாங்கமே இல்லை. அப்படி வரி விதிக்காத ஒரு அரசாங்கம் என்பது இதுவரையில் எங்குமே இருந்ததும் இல்லை. இனி இருக்கப்போவதும் இல்லை. குறிப்பாக எல்லோரும் இதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அது மட்டுமல்ல. எந்த முறையில் வரி விதிக்கவேண்டுமென்பது எல் லோரும் சிந்திக்கவேண்டியது அவசியம். இப்போது நாம் விதித் திருக்கிற வரி இருக்கிறதல்லவா? இந்த வரி போட்டிருக்கிறோமே . . .

*(மன்றத்தில் உறுப்பினர்கள் பேசிக்கொண்டிருக்கின்றனர்)*

**திரு. எம். ராஜகோபால் பிள்ளை :** நீங்களே பேசிக்கொண்டிருந் தால் நான் நிறுத்திக் கொள்கிறேன்.

**கனம் திரு. ஆர். வெங்கட்டராமன் :** நீங்கள் பேசலாம். மற்ற வர்கள் பேசுவதைக் கவனிக்கக்கூடாது. அதுதான் கவுன்சில் சம்பிரதாய முறை.

5-50 p.m. **திரு. எம். ராஜகோபால் பிள்ளை :** ஏதோ 1¾ கோடி ரூபாய் விவசாயிகளுக்கு வரி போட்டிருக்கிறார்கள். இதற்காக சிலர் அழுது, அங்கலாய்த்து, ஆர்ப்பரித்து அரட்டி, மிரட்டுகிறார்கள்.

**திரு. என். வி. நடராசன் :** தலைவர் அவர்களே, அங்கத்தினர் 'மிரட்டுகிறார்கள்' என்றார். சர்க்காரை யாரும் மிரட்டவில்லை. நியாயத்தைத்தான் எடுத்துச் சொல்கிறோம்.

**டெபுடி சேர்மன் :** அங்கத்தினர் தொடர்ந்து பேசலாம். மற்ற வர்களும் பேச வேண்டியிருக்கிறது. அதற்கும் நேரம் வேண்டும்.

**திரு. எம். ராஜகோபால் பிள்ளை :** சரி, வரி விதிப்பை நான் ஆதரிக்கிறேன். விவசாயிகளுக்கு நாம் இப்போது வரி விதிக்கவே இல்லை. ஆனால் விவசாயிகள் என்று சொல்லிக்கொண்டு இருக்

12th November 1965] [திரு. எம். ராஜகோபால் பிள்ளை]

கிற எத்தனையோ ஆட்கள் ஊர்களில் இருக்கிறார்கள். இன்றைக்கு எத்தனையோ கம்பெனிகள் இந்த ஊரில் இருக்கின்றன. அவர்கள் எல்லாம் கூட விவசாயிகள் என்று சொல்லிக்கொள்கிறார்கள்*** அவர்கள் எல்லாம் தங்கள் கள்ளப்பணத்தை எப்படி எங்கே முடக்குவது என்று எண்ணிக்கொண்டு தங்களை விவசாயிகள் என்று சொல்லிக்கொண்டு ***

அவர்கள் எல்லாம் தங்கள் கள்ளப் பணத்தை முடக்குவதற்காக நிலங்களை வாங்கி விவசாயம் செய்கிறார்கள். ஆனால் அவர்கள் விவசாயிகள் அல்ல. அவர்களுக்கு வரி விதிப்பதில் தவறில்லை என்று சொல்லிக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். ஏனென்றால் என்னுடைய மேடைப் பேச்சுக்கும் இங்கே பேசுவதற்கும் ஒத்து வராது.

* திரு. ஏ. சுப்ரமணியம்: மதிப்பிற்குரிய துணைத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் இங்கு கொண்டுவரப்பட்டிருக்கும் நில சட்டத் தீர்வை சம்பந்தமாகவும், நீர் வரி சம்பந்தமாகவும் வந்திருக்கும் மசோதாவை நான் எதிர்க்க வேண்டியவனாக இருக்கிறேன். ஏனெனில், வரி போடவேண்டியதுதான். வரி போடாத அரசாங்கமே உலகத்தில் இருக்கமுடியாது என்பதும் உண்மை, ஆனால் பாரதம் அந்த மாதிரி இருக்கக்கூடாது எனக்கு எவ்வளவு சுமையை சுமக்க சக்தி இருக்கும் என்பதை நிர்ணயித்து என் தலைமீது பாரம் வைக்கவேண்டும். நமது ரெவின்யூ அமைச்சர் இருக்கிறாரே அவர் எவ்வளவு சுமப்பாரோ அதற்குத் தக்கபடி அவருக்கு வைக்கவேண்டும். அவர் தலை மீது வைப்பதுபோல என்னுடைய தலையில் வைத்தால் இப்போது இருக்கும் நிலைமைக்கு என்னால் தாளமுடியுமா என்று பார்க்க வேண்டும். பட்டாதாரர்களின் தாரதம்யம் அறிந்து வரி போட வேண்டியதுதான். ஆனால் இப்போது காண்டு வெட்டு போட்டிருக்கிறது. காரணம் என்ன? மழையில்லை. சேலத்தில், மேட்டூரில் சென்ற வருஷம் இந்த நாட்களில் 120, 122 அடி நீர்மட்டம் இருந்தது. இப்போது 20 அடிக்கும் குறைந்திருக்கிறது. இந்த நிலைமையில் இப்போதுதானா விவசாயிகளுக்கு இந்த வரியைப் போடவேண்டும்? கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டாமா? நல்ல மழை பெய்து அணைக்கட்டுகளில் எல்லாம் நிறைய தண்ணீர் இருந்து விவசாயிகளுக்கு வருமானம் பெருகி இருந்தால் இந்த 25 சதவிகிதம் என்ன, 50 சத விகிதம் கூட போடலாமே. யார் போடவேண்டாம் என்று சொன்னார்கள்? ஆகையால் அதை இப்போது போடுவதை எதிர்க்கிறார்களே தவிர வரி போடக் கூடாது என்று சொல்லவில்லை. இப்போது போடப்பட்டிருக்கும் இந்த வரியானது இப்போது வேண்டாம். இப்போது ஜனங்களுக்கு பெரிய கஷ்டமான நிலைமை இருந்து வருகிறது. இப்போது வரி வஜா செய்யவேண்டிய காலம். மழை இல்லாததால், விளைச்சல் இல்லாததால் விவசாயிகளுக்கு வருமானம் இல்லாததால் ஏற்

*** Expunged as ordered by the Chair.

கனவே சரியான விளைவு இல்லாமல் இருப்பதால் வரியை இப்போது வஜா செய்ய வேண்டும். அதை விட்டு வரி போடுகிறேன் என்று சொன்னால் அவ்வளவு உசிதமாக இருக்காது ஆகையால் இந்த மசோதாவை நம்முடைய அரசாங்கம் சற்றுக் கவனித்து தீர புனராலோசனை செய்து மறுபடி கீழ் சட்டசபைக்கு அனுப்பி நிறுத்தி வைப்பது அல்லது கைவிடுவது நல்லது என்ற யோசனையை நான் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த சந்தர்ப்பத்தை அளித்ததற்காக நன்றி, வணக்கம்.

* **திரு. க. அன்பழகன் :** கனம் துணைத் தலைவர் அவர்களே, இந்த வரி உயர்வு குறித்துப் பேசிய கனம் அங்கத்தினர்களில் பெரும்பாலோர் இதை எதிர்த்திருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் இந்த அரசாங்கம் வரி விதிக்கக்கூடாதென்ற கொள்கை உடையவர்கள் அல்லர். எதிர்க் கட்சியினர் எப்போதுமே வரியை எதிர்ப்பவர்கள், அதனால் இந்த வரியையும் எதிர்க்கிறார்கள் என்று மதிப்பிற்குரிய ஆளுங்கட்சி அங்கத்தினர் ஒருவர் கூறினார். ஆனால் இந்த வரியை எதிர்க் கட்சியினர் மட்டுமின்றி ஆளும் கட்சியினரும் எதிர்த்திருக்கிறார்கள். இந்த மாநில முன்னாள் முதலமைச்சர் திரு. ஓ. பி. ராமசாமி ரெட்டியாரும் அதற்கு முன்னரே அமைச்சராக இருந்தவரான செட்டிநாடு அரசரும் இதை எதிர்த்திருக்கிறார்கள். ஆகையால் இந்த வரியை, வரி என்றாலே எதிர்க்க வேண்டுமென்பதற்காக நாங்கள் எதிர்க்கவில்லை. எதிர்க் கட்சியினர் வரியை எப்போதுமே எதிர்ப்பவர்கள் அல்லர் என்பதற்கு இரண்டு சான்றுகள் காட்ட விரும்புகிறேன். ஒன்று, விவசாய வருமான வரி இந்த அரசாங்கத்தால் கொண்டுவரப்பட்டபோது அது அவசியம் என்று நான் சார்ந்திருக்கும் எதிர்க் கட்சி அதை ஏற்றுக்கொண்டதுடன் அதை ஆதரித்தும் இருக்கிறது; அது தாங்கக் கூடியவர்கள் மீது விதிக்கப்படும் வரி என்பதால் அதை எங்கள் கட்சி ஒத்துக்கொண்டது. மற்றொன்று, துணை மானிய கோரிக்கையில் 8 கோடி ரூபாய்க்கு வரிகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. 1½ கோடி ரூபாய் அளவுக்கு விதிக்கப்படும் இந்த வரியைத் தவிர 6½ கோடி ரூபாய்க்கான வேறு வரிகள் மற்ற மசோதாக்களில் வருகின்றன; அவற்றை நாங்கள் முற்றிலும் எதிர்க்கவில்லை. அவை சம்பந்தமான சில திருத்தங்கள் தெரிவிக்கப்படுமே தவிர அவைகள் எங்களால் அடியோடு எதிர்க்கப்பட மாட்டா. அந்த வரிகள் கேடானவை என்று நாங்கள் அறிவிக்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் என்னவென்றால், என் மதிப்பிற்குரிய நண்பர், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சார்ந்த திரு. நடராஜன் தெரிவித்தது போல நெருக்கடி நிலையை நாங்கள் உணர்ந்திருக்கிறோம். இந்த அரசாங்கத்தார் கூட நெருக்கடி நிலைகாரணமாகத் தான் இந்த வரியைப் போடத் துணிந்திருக்கிறார்கள் என்பது என் கருத்து. இல்லாவிட்டால் இவர்களுக்கு இவ்வளவு பெரிய துணிச்சல் ஏற்பட்டிருக்க முடியாது. இவர்களுக்கு இவ்வளவு பெரிய துணிச்சல் ஏற்பட்டிருக்க முடியாது என்று நான் சொல்லும்போது நேர்முகமாக யாரையும் குறிப்பிட்டு நான் அவ்வாறு சொல்லவில்லை; ஆளும் கட்சியைக் குறித்துத் தான் நான் அவ்வாறு சொல்கிறேன்.

12th November 1965] *[திரு. க. அன்பழகன்]*

ஒரு பக்கத்தில் மத்திய அரசு வரி விதிப்பை வற்புறுத்துகிறது. இன்னொரு பக்கத்தில் போர் நெருக்கடி இருக்கிறது. எனவே இந்த வரி கொண்டுவரப்படுகிறது. இந்த வரி விதிப்பு விவசாயி களுக்குப் பெரிதும் பாதகமானது என்று அனைவராலும் எண்ணப் படுகிறது. இது இந்தத் திங்களில் வராமல் 4, 5 திங்கள் கழித்து வந்தால் அப்போதுள்ள வெப்பதட்ப நிலைகாரணமாக அப்போது இதற்கு எதிர்ப்பு ஏற்படாமல் இருக்கலாம். ஆனால் இன்றையச் சூழ்நிலையில் நிலத்தின்மீது இப்போதுள்ள வரியே அதிகமானதாக இருக்கிறது என்று கருதப்படுகிறது. நான் மற்றவர்களைப் போல விவசாயிகளின் தொல்லைகளை இங்கே விளக்கிக்காட்ட விரும்ப வில்லை. அவர்களுடைய குறைகள் தெரிந்தும் அரசாங்கம் இது காறும் அவைகளை நீக்கவில்லை. இந்நிலையில் இந்த வரிவிதிப்பு அவர்களுடைய உற்சாகத்தை அழிக்கும் என்பதாலேயே இதை எதிர்க்கிறேன். மக்களின் வாழ்க்கை நிலை—வருமான நிலவரச் சூழ்நிலையைக் கவனித்து வரி விதிக்கப்பட வேண்டும். அப்படிப் பார்க்கும்போது இந்த வரிவிதிப்பு 1965-ஆம் ஆண்டு ஜூலையி லிருந்து மேற்கொள்ளப்படும் என்பதற்குப் பதிலாக 1966-ஆம் ஆண்டு ஜூலையிலிருந்து மேற்கொள்ளப்படும்; அது வரையில் இதுதள்ளிவைக்கப்படும் என்று சொன்னாலாவது இன்று மழை யில்லாது வருந்தும் உழவர்கட்கு நன்றாக இருக்கும்; அல்லது, காங்கிரஸ் கட்சி அங்கத்தினர் ஒருவர் சொன்னதுபோல 'நெருக் கடி காரணமாகத்தான் இந்த வரியைப் போடுகிறோம் என்பார்க ளானால், நெருக்கடிக்குப் பிறகு இதை எடுத்துவிடுவோம்' என்று உறுதி கூறினால் நன்றாக இருக்கும்.

இப்போது விவசாயிகள் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பதால் இந்த வரி இப்போது அமலுக்கு வராது, 1966-ஆம் ஆண்டு ஜூலை யில் தான்அமலுக்கு வரும் என்று சொல்லி, அதற்குள் மழையும் வந்தால் விவசாயிகளுக்கு அவ்வளவு தொல்லை இருக்காது. வரி விதிப்பிற்கான காரணங்கள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. அக் காரணங்களில் நெருக்கடி நிலை ஒன்று; 4-வது ஐந்தாண்டுத் திட்டத் தில் செய்தே தீர வேண்டிய மூன்றாவது திட்டத்தில் தொடங்கிய வேலைகளைப் பூர்த்தி செய்வது மற்றொன்று. துணை மானிய கோரிக்கையின்படி இன்னும் 6½ கோடி ரூபாய்க்கு வரி விதிக்க மசோதாக்கள் இருக்கின்றன. இந்த 6½ கோடி ரூபாயை அரசாங் கம் முழுவதும் பெற முடியும். 1½ கோடி ரூபாய்க்கான வரிவிதிப் பிற்குத் தான் வலுவான எதிர்ப்பு இருக்கிறது. மேலும் இந்த அர 6-00 p.m. சாங்கத்தின் வரவு செலவுத் திட்டம் இன்று 160 கோடி ரூபாய் அளவிற்கு இருக்கிறது. இவ்வளவு வருமானம் உடைய இந்த அரசாங்கம் இக்கட்டான நிலை இருக்கிறது என்பதற்காக விவசா யத் துறையில் உணவு உற்பத்தி செய்யவேண்டியவர்களுக்கு இம் மாதிரி வரி விதிக்கக்கூடாது. இந்த வரி விதிப்பு அந்த மொத்த வருமானத்தில் 1.6 சதவிகித அளவிற்குத்தான் வருகிறது. இப்படிப்பட்ட இந்த வரிவிதிப்பை அரசாங்கம் இப்போதும் கை விடலாம்.

மேலும், வியாபாரிகள் பலர் வரி கொடுக்காமல் ஏமாற்றுகிறார்கள் என்பதால் அதைத் தடுக்க விற்பனை வரிச் சட்டத்திற்குத் திருத்தம் கொண்டுவரவிருந்த இந்த அரசாங்கம் பொறுக்குக் குழு கூடிய பின்னர், வணிகர்கள் இனிமேல் தாங்கள் சரிவர வரி செலுத்துவதாகக் கூறியதன் பேரில், அந்தச் சட்டத் திருத்தத்தைக் கொண்டுவருவதைக் கைவிட்டுள்ளது; அந்தத் திருத்தத்தை அரசாங்கம் ஒத்திவைத்திருக்கிறது என்றுகூட சொல்ல முடியாது. இந்த நெருக்கடியில் வியாபாரிகளின் ஒத்துழைப்புத் தேவை என்பதால் அந்தத் திருத்தச் சட்டத்தை இந்த அரசாங்கம் ஒத்திவைக்குமானால், விவசாயிகள் ஒத்துழைப்பைப் பெறவேண்டிய அரசு இந்தப் புது வரியை இப்போது கொண்டுவருவது எவ்வகையிலும் நல்லதல்ல, முறையுமல்ல.

வரி குறித்த அடிப்படையான கருத்து சம்பந்தமாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். வரியை, தாங்கக்கூடியவர்களுக்குத் தாங்கக்கூடிய சமயத்தில் விதிக்கவேண்டும். வரியைத் தாங்கக்கூடியவர்களுக்கே கூட அவர்கள் கஷ்ட நஷ்டமடைந்துள்ள சமயத்தில் விதிக்கக்கூடாது. சிலருடைய பெயரைச் சொல்லி அப்படிப்பட்டவரிடம் கறுப்புப் பணம் இருப்பதாக ஒரு கனம் அங்கத்தினர் கூறினார். அவரிடம் கறுப்புப் பணம் இருந்தபோது அந்தப் பணத்தை அரசாங்கம் கைப்பற்றியிருக்கவேண்டும். அந்தப் பணம் நிலமாக மாறிவிட்டது என்பதற்காக அந்த நிலத்திற்காக மற்றவர்களுக்கெல்லாம் நிலத்தின் மீது சர்சார்ஜ் போடுவதாகச் சொன்னால், அது சரியாகாது. செல்வந்தர்கள் எல்லோரும் செல்வந்தர்களாகவே இருக்க வேண்டும் என்று நாங்கள் சொல்லவில்லை. நாட்டில் பொருட்செல்வம் மக்கள் அனைவருக்கும் பயன்பட அவர்களுடைய செல்வம் இறங்கத்தான் வேண்டும். இந்த வரி எல்லா விவசாயிகளையும் பாதிக்கிறது. 10 ஏக்கருக்குக் குறையாத அளவு நிலமுள்ளவர்களுக்குத்தான் இந்த சர்சார்ஜ் என்று அரசாங்கம் சொல்லுமா? 10 ரூபாய்க்கு குறைவாக வரி கட்டுபவர்களுக்கு விதிவிலக்கு உண்டு என்று அரசாங்கம் சொல்லுமா? அப்படிக் கூறாத வரையில் இந்த வரி எல்லா விவசாயிகளையும் பாதிப்பதால் இதை இப்போது கொண்டுவருவது முறையல்ல என்று சொல்ல விரும்புகிறேன்.

மற்றொன்று சொல்ல விரும்புகிறேன். மிகப் பழங்காலத்தில் இருந்தே நில அடிப்படையில் வரி வசூலிக்கப்பட்டு வருகிறது. ஆனால் அது பழைய முறை. இக்காலத்தில் வருமான அடிப்படையில் வரி பெறப்படுகிறது. விற்பனை வரி போன்று வியாபார அடிப்படையில் வரி முறை இன்று அமைந்தாலும் எதிர் காலத்தில் அரசாங்கத்தின் வருமானம் பெருக வேண்டுமானால் அது பெருகும் தொழில்களிலிருந்துதான் வரியை வாங்க வேண்டும். இதற்காக, தொழில்களுக்கெல்லாம் அதிக வரி போட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. வளரும் தொழில்கள் மூலம், அதற்கான வரி மூலமுமே அரசாங்கம் வருமானம் காண வேண்டும். வியாபாரத்தையும் தொழிலையுமே வரிக்குரியவையாகக் கருத வேண்டும். ஆனால் விவசாயத்திற்கு இன்னும் வரி விதிக்கிறோம்' என்று சொல்வது இக்கால நிலையில் சரியல்ல.

12th November 1965] [திரு. க. அன்பழகன்]

காங்கிரஸ் இயக்கம் மகாத்மா காந்தியின் அடிச் சுவட்டில் செல்லும் இயக்கம், என்று கூறப்படுகிறது. அந்த இயக்கத்தைச் சார்ந்தவர்கள் 'விவசாயிக்கு இன்னும் புது வரி போடுகிறோம்' என்பது நியாயமல்ல. விவசாயிகளுக்கு வரி போடுவதால் அவர்கள் உணவு உற்பத்தி செய்வதில் உற்சாகம் அடைய மாட்டார்கள். ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாள் கோயிலைப் புதுப்பிக்க 50 லட்ச ரூபாய் வசூலிக்கலாம் என்பதாகவும் அதற்காக ஒரு குழு அமைக்கப்படுவதாகவும் அண்மையில் பத்திரிகையில் ஒரு செய்தியைப் பார்த்தேன். நாட்டில் இந்த அளவிற்கு பொருள் சேர்க்கும் வாய்ப்பு இருக்கிறது என்பது இதிலிருந்து தெரிகிறது. எனவே அரசாங்கத்திற்கு நிதி தேவையானால், கோயில்களிலிருந்து முறையாக நிதி கேட்டால் நிறையப் பணம் கிடைக்கும் என்று சொல்ல விரும்புகிறேன்.

போர் முனையில் வெற்றியடைய வேண்டியது அவசியம் என்பது போன்றே ஏர் முனையில் வெற்றியடைய வேண்டியதும் அவசியம் என்று ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறினார். இந்தியாவின் பிரதமரும், போர்முனையாலும் ஏர்முனையாலும் வெற்றி காண்பது நமது கடமை என்றே கூறினார். பழங்காலத்தில் ஒரு கவிஞர் மன்னன் ஒருவனைப் பார்த்து "மன்னவனே, நீ பெறுகிற வெற்றி உன் படை வீரர்கள் பெற்ற வெற்றியல்ல; நீ போர்க் களத்தில் பெற்ற வெற்றி நீ பெற்ற வெற்றியுமல்ல; அது உன் ஆற்றலினால், போர்த்திறத்தால் பெற்ற வெற்றி அல்ல, அது உன் படை வீரர்களை வாழ வைக்கிற உழவர்கள் ஏர் முனையில் எய்திய வெற்றி" என்று கூறினார். அந்த அளவு ஏர் முனையில் காட்டப்படும் உழைப்பால் அவர்கள் உற்பத்தி செய்யும் உணவுப் பொருளே—போர் முனை வெற்றிக்கே அடிப்படை என்பதை இதனால் உணரலாம். ஏர் முனையில் உள்ளவர்கள் அவர்களுக்கு விதிக்கப்படும் வரியைக் கூட கண்ணீர் சிந்தியவாறே செலுத்துவார்கள். ஆனால் அவர்களுக்கு மனக் கசப்பு ஏற்படுத்துவது உண்மையிலேயே நல்லதல்ல. கனம் அங்கத்தினர் திரு. தியாகி ராமசாமி "வரி போடுவதை நான் அதிகமாக எதிர்க்க விரும்பவில்லை" என்று சொன்னாரே தவிர வரவேற்பதாக அல்ல. இந்த வரியைப் பொறுத்தவரையில், இந்த மன்றத்தில் கூட்டுக் கருத்து 'கான்ஸென்ஸஸ் அஃப் ஒபினியன்' என்ன என்று பார்த்தால், இது கூடாது என்பதுதான். 'இதை மனதார வரவேற்கிறேன்' என்று இந்த அவையிலே உள்ள யாரும் சொல்லவில்லை. 'மக்கள் செலுத்துவார்கள் எங்கே போய்விடுவார்கள். வரியைப் போடுங்கள்' என்று ஒருவர் மட்டும் கூறினார். மற்றவர்கள் எல்லோரும் 'இது இந்த நேரத்திற்கு ஏற்றதல்ல' என்று சொன்னார்கள். எனவே, கனம் அமைச்சர் அவர்கள், அவருக்குச் சுதந்திரம் இருக்குமானால், இந்த அவையில் தெரிவிக்கப்பட்ட கருத்துக்களை கவனித்து, இந்த வரி இன்றியமையாததென்று அவர் துணிந்தால் '1966-ம் ஆண்டு ஜூலையிலிருந்து தான் இந்த வரி இயங்கும்' என்று தெரிவிக்கட்டும்; அல்லது உண்மையிலேயே போர் நெருக்கடி காரணமாகத்தான் இந்த வரி என்றால் 'நெருக்கடி நீங்கிய பிறகு இந்த சர்சாஜ் வரி

6-07 p.m.

நீக்கப்படும்' என்றுவது அவர் உறுதி சொல்லட்டும். எவ்வாறுயினும், மழையின்றி ஆற்று நீரின்றி வயல் வெடித்துக் கிடக்கும் இந்த நோத்தில் — இந்த வரியைக் கைவிட முன்வரட்டும். இவற்றில் எது குறித்துமே தெளிவு இல்லாது இருக்குமானல் தயவுசெய்து இந்த மசோதாவை நிறைவேற்றுது நிறுத்தி வைக்குமாறு அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

6-07 p.m. DEPUTY CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. to-morrow.

The House then adjourned.

VI—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

## A. Statutory Rules and Orders.

* 272. *Notification issued with G.O. Ms. No.* 1790, *Health, dated* 21st *August* 1965 *making amendments to the rules relating to the enforcement of vaccination in Municipal areas.* [*Laid on the Table of the House under Section* 304 (d) *of the Madras District Municipalities Act*, 1920 (*Madras Act V of* 1920).]

* 273. *Notification issued with G.O. Ms. No.* 3029, *Home, dated* 25th *August* 1965 *exempting from payment of tax for the vehicle bearing registration No. MSS.* 4922 *belonging to the World Health Organisation and assigned to the Indian Council of Medical Research, Infectious Diseases Hospital, Madras.* [*Laid on the Table of the House under Section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act*, 1931 (*Madras Act III of* 1931).]

TRUTH ALONE TRIUMPHS வாய்மையே வெல்லும்

## B. Reports, notifications and other papers.

* 52. *Report of the Select Committee on the Madras General Sales Tax (Second Amedment) Bill*, 1965 (*L.A. Bill No.* 20 *of* 1965).

* 53. *Statement of Resources (English and Tamil)—Presented by the Hon. Chief Minister to the Madras Legislative Assembly on* 3rd *November* 1965.

---

* Laid on the Table of the House on 8th November 1965.